1.

ஒரு நாள், ஒரு சிறிய பெண் தன்னுடைய மத்தளத்தை அடித்தபடியே ஊரை சுற்றி வந்தாள்.

1.1

அவளின் அப்பா உக்குலேலே என்னும் கருவியை வாசித்தார். அவளுடைய அம்மா புல்லாங்குழல் ஊதினார். அந்த மூவரும் ஒரு குடும்ப வாத்தியக்குழுவாக இருந்தனர். ஊரில் கல்யாணம், பிறந்தநாள் போன்று எந்த கொண்டாட்டமாக இருந்தாலும், அந்த குட்டிப் பெண்ணும் அவளுடைய பெற்றோரும் அழைக்கப்பட்டனர்.

2.

அவர்களின் நகரம் ஒரு பிரச்சனையில் இருந்தது. காலப்போக்கில் அது கடகடவென மாறிவிட்டது. மலர்களும் மரங்களும் பூத்துக்குலுங்கிய நிலமெல்லாம் இப்போது ஒன்றும் இல்லாமல் இருந்தது. கோடைகாலத்தில் வறட்சி நிலவியது.

இதை மாற்ற எதாவது செய்தாக வேண்டும்.

2.1

அந்த ஊரில் வசிக்கும் மக்கள் எல்லோரும் ஒன்று திரண்டனர். ஊரில் ஒரு அணை கட்டி, வசந்த காலத்தில் பெய்யும் மழையை சேர்த்து வைத்து, கோடைகாலத்தில் அதை நிலங்களுக்கு பயன்படுத்த முடிவு செய்தனர்.

3.

கவனமான திட்டங்களுக்கு பிறகு அணையை கட்ட தொடங்கினர். ஊர் மக்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து கொஞ்சம் கொஞ்சமாக அணையை தோண்டினர்.

ஆனால் யாரும் எதிர்பாராத ஒரு விஷயம் நடந்தது.

3.1

அவர்கள் தோண்டும் இடத்தில் ஒரு பெரிய பாறை இருந்தது. அது முன்பு கண்டதை விடவும் மிகப்பெரியதாக இருந்தது.

4.

மக்கள் அனைவரும் அந்தப் பாறையை சுற்றி தோண்ட முடிவு செய்தனர். ஆனால் தோண்டத் தோண்ட அந்தப் பாறை பெரிதாகிக் கொண்டே போனது.

அந்தப் பாறை ஒரு சிறிய மலை அளவுக்கு பெரியதாக இருந்தது.

4.1

ஊர் மக்கள் தங்களுக்கு தோன்றியதை எல்லாம் செய்து பார்த்தனர். ஆனால் அந்தப் பாறை எங்கும் நகர்வதாக இல்லை. வேலை நின்று போனது.

5.

அந்த ஊரில் முன்பு வாழ்ந்த அரக்கர்களை பற்றி இன்னும் கதைகள் சொல்லிக் கொண்டிருந்தனர். அதில் ஒன்று அபியோயோ என்னும் அரக்கனை பற்றிய கதை. அவன் மரங்கள் அளவுக்கு பெரியதாகவும் மக்களையே சாப்பிட்டு விடுவான் என்றும் கூறினர். ஆனால் இது எல்லாம் அந்த சிறிய பெண்ணுக்கு முன்பே தெரியும். அவளின் அப்பாவும் தாத்தாவும் தான் அபியோயோவை ஊரைவிட்டுத் துரத்தி மக்களையும் அந்த ஊரையும் காப்பாற்றினர்.

5.1

அந்தப் பெண் கூறினாள், “அப்பா, அபியோயோவால் இந்த பெரிய பாறையை நகர்த்த முடியும்.” அவளின் அப்பா சிரித்துக் கொண்டே “ஆம்” என்றார். “நாம் ஏன் அபியோயோவை மீண்டும் இங்கு அழைக்கக்கூடாது”, என்று கேட்டாள் அந்த சிறிய பெண். “தாத்தா இன்னும் அவரின் மந்திரக்கோலை வைத்துள்ளார். அபியோயோ இந்தப் பாறையை நகர்த்திய பிறகு அவர் மீண்டும் அவனை மறைய வைத்துவிடலாம்”, என்று யோசனை சொன்னாள் அந்த சிறிய பெண்.

6.

“அபியோயோவை மீண்டும் அழைப்பதா, மக்களை உண்ணும் அந்த அரக்கனையா?”, என்று ஆச்சரியத்துடன் கேட்டார் அந்த சிறிய பெண்ணின் அம்மா.

“அவனுக்கு நாம் நிறைய நல்ல உணவுகள் செய்து கொடுத்தால் அபியோயோ நம்மை சாப்பிட மாட்டான்”, என்றாள் அந்த சிறிய பெண்.

“எல்லா நல்ல உணவுகளும் தீர்ந்து விட்டால் என்ன செய்வது”, என்று கேட்டார் அவளின் அம்மா.

6.1

“நிறைய நல்ல பாடல்களை பாடுவோம், அவன் நம் மீது கோபப்பட மாட்டான்”, என்றாள் சிறிய பெண்.

“பாடல்களா!”, என்று ஆச்சரியத்துடன் கேட்டார் அவளின் அப்பா. “அது இந்த முறை வேலை செய்யும் என்று தோன்றவில்லை”, என்றார். “ஆனால் நாம் அபியோயோவை அழைக்காவிட்டால், நம்மால் அந்த அணையை ஒருபோதும் கட்ட முடியாது”, என்றாள் சிறிய பெண்.

மதியம், மூவரும் சேர்ந்து தாத்தாவை காண சென்றனர்.

7.

“அபியோயோவை மீண்டும் அழைப்பதா! பசியுள்ள அரக்கன் மிகவும் ஆபத்தானவன்”, என்றார் தாத்தா.

“ஆனால் வேறு யாராலும் அந்த பெரிய பாறையை நகர்த்த முடியாது”, என்றாள் சிறிய பெண்.

”அதுவும் சரிதான் என்று கூறியபடியே தனது பெட்டிக்குள் இருந்து மந்திரக்கோலை கையில் எடுத்தார். “இது இன்னும் வேலை செய்கிறதா என்று பார்க்கலாம்”, என்றார்.

7.1

‘டிங்’!! அந்த சிறிய பெண்ணின் மத்தளம் திடீரென மறைந்து போனது.

“தாத்தா என் மத்தளத்தை திருப்பிக் கொடுங்கள்”, என்றாள் சிறிய பெண்.

‘டிங்’!! மத்தளம் மீண்டும் அந்த சிறிய பெண்ணின் கைகளுக்கு வந்தது.

“என்னுடைய மந்திரசக்தி இன்னும் என்னிடம் இருக்கிறது”, என்று சிரித்துக்கொண்டே கூறினார் தாத்தா.

8.

அடுத்த சில நாட்களுக்கு ஊர் மக்கள் அனைவரும் தங்கள் சிறந்த உணவுகளை சமைத்தும் சிறந்த பாடல்களை பாடியும், பயிற்சி செய்து தயாராகினர்.

9.

தாத்தா சிறந்த கட்டைகளை வைத்து ஒரு நெருப்பை மூட்டினார். அதிலிருந்து ஒரு தனி வகையான புகை உண்டானது. பின் தன் மந்திரக்கோலை ஆட்டியபடியே சில மந்திரச் சொற்களை சொன்னார்.

9.1

.....டிடிடிங்ங்ங்ங்ங்!!!!!

10.

சட்டென எல்லோரின் கண் முன்னும் அபியோயோ வந்தான். மரங்களைப் போன்று பெரிய உயரம், கைகளில் பெரிய பெரிய நகங்கள், பெரிய பெரிய பற்கள், நாற்றமடிக்கும் கால்கள். பெண்கள் அனைவரும் இஇஇ!!! என அருவருப்புடன் ஓடினர். ஆண்கள் எல்லோரும் மயங்கி விழுந்தனர்.

“அபியோயோ மீண்டும் வந்துவிட்டான்!”

10.1

அபியோயோ கொட்டாவி விட்டுக்கொண்டே நெழிந்தான்.

“ஆஆஆஆஆஆ! எனக்கு பயங்கரமாக பசிக்கிறது.”

11.

ஊர் மக்கள் அனைவரும் இனிப்பு காரம் பழங்கள் என எல்லா வகையான உணவுகளையும் அபியோயோவிற்கு கொண்டுவந்தனர்.

அபியோயோ அவன் வாயை அகலமாகத் திறந்தான்.

லபக்!!! இனிப்புகள் யாவும் ஒரே வாயில் உள்ளே சென்றது.

லபக்!!! கார வகைகள் யாவும் ஒரே வாயில் உள்ளே சென்றது.

11.1

விரைவில் அபியோயோ எல்லா உணவுகளையும் உண்டு முடித்தான்.

ம்ம்ம்ம்ம்!!! என்ற சத்தத்துடன் தனது வயிற்றை தடவினான். அந்த சிறிய பெண் தைரியமாக அவனருகே சென்றாள்.

“அபியோயோ, நீ இன்னும் பலசாலி தானா”, என்று கேட்டாள்.

12.

“அதிலென்ன சந்தேகம்”, என்று கேட்டான் அபியோயோ.

“அந்தப் பெரிய பாறையை நகர்த்தும் அளவுக்கு பலசாலியா?”

அபியோயோ அந்தப் பாறையைத் தூக்கி மேலே வீசினான். அது ஒன்றுமில்லாத காகிதம் போல மேலே பறந்தது.

12.1

மேலே உயரமாக பரந்த பாறை கீழே வந்து விழுந்தது.

தட்ட்ட்ட்ட்ட!!!

மக்கள் அனைவரும் அபியோயோ பெயரை கத்தினர். எல்லோரும் சந்தோஷத்துடன் கட்டிப் பிடித்து நடனமாடினர். ஊரில் இருந்து நாய்கள் யாவும் சந்தோஷமாக உலைத்தது.

13.

“எனக்கு பசிக்கிறது”, என்றான் அபியோயோ. “ஆனால் எல்லா உணவுகளும் தீர்ந்துவிட்டது”, என்று கோபமானான் அபியோயோ. சிறிய பெண் தனது மத்தளத்தை எடுத்து அடிக்கத் தொடங்கினாள்.

டன் டன்டட டன்டன் டடடடட டன்டன் டடன்!!!

அவளின் அப்பா தனது உக்குலேலேவை வாசிக்கத் தொடங்கினார்.

க்ளக் க்ளிங் ப்ளக் பளங் கிங் பிக் ப்ளங்!!!!

அவளின் அம்மா புல்லாங்குழலை ஊதினார்.

உஉஉஉஉ உல்ல உஉஉஉல்ல உஉஉஉ!!!!

மக்கள் எல்லோரும் பாடத் தொடங்கினர்.

14.

“இந்தப் பாடல் என்னுடையதா???”

14.1

எல்லோரும் வேகமாக வாசித்தனர்.

15.

இன்னும் வேகமாக...

15.1

“ஓஓஓவ்வ்!!! எனக்கு சோர்வாக இருக்கிறது”, என்று அபியோயோ மெல்லியதாக கூறினான்.

16.

கீழே படுத்து கண்களை மூடினான். விரைவில் குறட்டை சத்தத்துடன் அபியோயோ நன்றாக உறங்கினான்.

“இதுதான் சரியான நேரம். ஆனால் தாத்தாவும் அவருடைய மந்திரக்கோலும் எங்கே??”, என்றாள் சிறிய பெண்.

“அவர் அங்கே தான் இருந்தார்”, என்று அவளின் அம்மா சுட்டிக்காட்டினார்.

16.1

“ஐயோ!” என்று அலறினாள் சிறிய பெண். தாத்தா “உங்களுக்கு ஒன்றும் ஆகவில்லையே”, என்று கேட்டாள்.

“எனக்கு ஒன்றும் ஆகவில்லை”, என்றார் தாத்தா. “எப்படியோ அந்த நாளையிலிருந்து தப்பித்து விட்டேன்.”

“ஆனால் உங்களுடைய மந்திரக்கோல் எங்கே?”

“அதுதான் தெரியவில்லை”, என்றார் தாத்தா.

17.

”இதோ இங்கே இருக்கிறது”, என்றார் அவளின் அப்பா. எல்லோரும் உடைந்த மந்திரகோலையும், உறங்கும் அரக்கனையும் பின் அந்த சிறிய பெண்ணையும் மாறி மாறி பார்த்தனர்.

“நீதான் இந்த சிக்கலை உருவாக்கினாய். இப்போது நீயே இதற்கு ஒரு வழி சொல்”, என்றனர் ஊர் மக்கள் அனைவரும்.

17.1

“இதற்கு ஒரே ஒரு வழிதான் உள்ளது”, என்றாள் சிறிய பெண். “அவனுக்கு நிறைய நல்ல உணவுகளை செய்து கொடுத்தால் நம்மை சாப்பிடமாட்டான். நிறைய பாடல்களை பாடி மகிழ்வித்தால் நம்மீது கோபப்படமாட்டான்”, என்றாள்.

18.

காலப்போக்கில் மக்கள் அனைவரும் அந்த அரக்கன் உடன் வாழ பழகிக் கொண்டனர். அபியோயோ ஒரு தோட்டத்தில் உறங்கினான். மக்கள் அனைவரும் அவன் பற்களை தேய்த்து சுத்தப்படுத்தினர்.

18.1

அபியோயோவும் அந்த சிறிய பெண்ணும் நல்ல நண்பர்களாகினர். அபியோயோ அவர்களின் குடும்பத்தில் ஒருவன் ஆனான். அவன் நாற்றமடிக்கும் கால்களை சுத்தப்படுத்த கூட அவனுக்கு உதவி செய்தனர்.

அந்த நகரம்???

19.

அபியோயோவின் உதவியுடன் அந்த அணையை கட்டி முடித்தனர். மக்கள் அனைவரும் நல்ல உணவுகளையும் நல்ல பாடல்களையும் பகிர வேண்டும் என்று உணர்ந்தனர்.

இறுதியாக அபியோயோவை பார்த்தபோது, அவன் மரம் நட்டுக் கொண்டிருந்ததாக யாரோ சொன்னார்கள்.